சிவத்திடத் தன்பிலாதவரையும் உள்ளம் நெகாத வரையும், நீறணியகில்லாதவரையும் காணின் அடிகளார்க்கு வருத்துந் தெய்வத்தையும் விலங்கையும் கண்டாற் போன்ற உணர்ச்சிமிகும். அதனால் அவர்களைக் காணின் மிக அஞ்சுவதாக அறிவிக்கின்றார்கள். இதற்கென்றே இயன்ற பகுதி அச்சப் பத்தாகும்.

பெருமிதம் என்பது வீரம். அதாவது எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக நிற்பது. இது கல்வி முதலிய நான்கு நிலைக்களனாகத் தோன்றும், கல்வியாவது தவமுதலாகிய விச்சை யென்பர் பேராசியர். நமது வாதவூர் வள்ளல் பிடித்த பத்தில் இறைவனை நோக்கி "சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவதினியே?' என்று வினவியருளு கின்றார். ஓர் ஆண்டானைப் பார்த்து அடிமை வினவலாமா? தன் கடமையாகிய தவத்திற்றவறாத் தன்மை தம்மிடம் இருப்பதால் இங்ஙனம் வினவுகின்றார்கள். ஆதலால் தவமாகிய கல்வி பற்றிய பெருமிதமாகும் இந்தப் பாடல். 'பெற்றதார் பெறுகிற்பார்' என்பதும், 'ஆர்பெறுவார் அச்சோவே' என்பதும் இத்தகைய வீரமே.

**வெகுளிச்சுவை** அன்புள்ளத்து அங்குரியாது அல்லவா? ஆதலால் தம் மாட்டு எழுந்த வெகுளியைத் திருவாசகத்துள் காண்டல் அரிது. ஆனால் இறைவனிடத்து (மறக்கருணை காட்டியதாக) வெகுளி தோன்றியதாகச் 'சிரமொன்றறத்தன் திருப்புருவ நெரித்தருளி" என்றும், "வளைந்தது வில்லு விளைந்தது பூசல் உளைந்தன முப்புரம்" என்றும் பல இடங்களில் வெகுளிச்சுவையின் குறிப்பும் விறலும் பேசப்படுகின்றன.

**உவகைச்சுவை** செல்வம் அறிவு முதலிய நான்கினையும் நிலைக்களனாகக் கொண்டது என்பது இலக்கணம். செல்வம் பொருட்செல்வமும், அருட்செல்வமுமென இரண்டாகும். அடிகள் அருட்செல்வம் பெற்ற மகிழ்ச்சியால், 'தேனா யின்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' 'சிவன் கருணைத் தேன்பருகி' 'அம்மையெனக்கருளியவாறு' 'தன்கழலே சேரும் வண்ணம் ஆதியெனக்கருளியவாறு' எனத் தம்மனுபவத்தைக் கூறுமுறையால் தம் மனத்தெழுந்த அனுபவத்திறத்தை - அதன் விளைவாகிய உவகைச்சுவையைக் காட்டுகின்றார்.

**சமநிலை** யல்லது சாந்தத்தை 'நன்றேசெய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' 'வினையேன்

தொகுதிபொறுத் தென்னை யாண்டுகொள், 'அவன்றன் குறிப்பே குறிக்கொண்டு போமாறமைமின் விடுமின் வெகுளி வேட்கை மிகவோர் காலமினியில்லை' என்பன போன்ற பல பகுதிகள் ஆன்மாவின் முனைப்பையடக்கி அமைதியை வழங்குவன.

**கற்பனை:**

கவிதைக் கிணற்றின் வற்றா ஊற்று கற்பனை. இக்கற் பனைகள் அன்புகனிந்த உள்ளத்தில்தான் அன்புக்குரியவனை அநுபவிக்கும்போது எழும்பும். அங்ஙனமே அடிகளார் திருவுள்ளம் ஆண்டவன் திருமுடியிற் கிடக்கும் கபாலத்தையும், அரவையும் மதியையும் கண்டு ஒரு கற்பனை செய்கிறது. எங்ஙனம்? கபாலப் பொந்துகளில் குடியிருக்கும் பாம்புகள் படத்தை விரித்துச் சுருக்கிக் கொள்கின்றன. இதைப் பார்த்த இளமதி அஞ்சிக் கங்கையிற் குதித்து ஒளிக்கின்றான் என்கிறார். முடிக்கங்கையில் இருக்கும் பிறைமதி கங்கையாற்றில் ஓடும் மரக்கலம் போல இருக்கிறது என்கின்றார்கள். இங்ஙனம் கற்பனைச் சித்திரங்கள் பல இந்நூலில் மிளிர்கின்றன.

**அரும்பிரயோகங்கள்:**

இவர்கள் வாக்கிற் சில அரிய பிரயோகங்கள் அழகு செய்து நிற்கின்றன. அவை நரிப்பு, சிறவு, பிறவி, இறவி, வினைக்கேடன், குமண்டை, அனுகுலம், பைதல், குதுகுதுப்பு, விதுவிதுப்பு, உவலைச் சமயங்கள், சவலை, பப்பு என்பனவாம்.

உலக வழக்கில் மெனக்கேடு, மெனக்கட்டவன் என்ற வழக்குக் காணப்படுகிறது. அதனை ஆராய்ந்த சில பத்திரிகைகளில்கூட மனக்கேடு என்பதே இதன் உண்மை யுருவமென்றும், முன்னக்கேடு (உற்பாதம்) என்றும் திருத்தி எழுதின. நம் அடிகளார் அதன் உண்மையுருவம் வினைக்கேடு என்பர். அங்ஙனமே அருவெறுப்பா, அருவிருப்பா, அருவருப்பா என்பது ஆய்வில் இருப்பது ஒன்று. அதன் உருவத்தை எதுகையில் வைத்தே அடிகளார் அருவருப்பு என முத்திரித்து மொழிகின்றார்கள்.

**உலக வழக்கிலுள்ள சில பிரயோகங்கள்:**

எட்டும் இரண்டும் தெரியாதவன் என்பன போன்றனவும், அதெந்து, குப்பாயம், அச்சன், அச்சோ முதலிய திசைச் சொற்களும் இதன்கண் இடம்பெற்றுள்ளன. இதனால் அடிகளார் யாத்திரை தமிழ்நாட்டளவில் அன்றிப் பிற நாடுகளிலும் இருந்தமை புலனாகும்.

**அஞ்செழுத்தின் பெருமை:**

திருவாசகமே அஞ்செழுத்துப் பெருமைகூற எழுந்த நூல் என்னத் தடையில்லை. ஏன்? தொடங்கும்போதே "நமச்சிவாய வாழ்க" எனத் தொடங்குகிறது. பின்னர் 'போற்றியோ நமச்சிவாய' எனப் பாராட்டுகிறது. பின்னர், 'எண்ணிலேன் திருநாமம் அஞ்செழுத்தும் என் ஏழைமை யதனாலே' என்றும், 'இயல்பொடஞ்செழுத்தோதி' என்றும் இரங்குகிறது. அம்மட்டோ! 'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்' என அநுபவ முதிர்ச்சிக்கண் சூக்கும பஞ்சாட் சரத்தை வியக்கின்றது. இன்னும் மந்திரத்தை மறைவாகவும் சொல்லி நம்மை யுய்ய வைக்கிறது. 'உடையாளுன்றன் நடுவிருக்கும்' என்ற திருப்பாடலில், சிவயசிவ என ஆன்ம எழுத்தை இருமருங்கும் சிவசக்திகள் பாதுகாத்து நிற்க இருக்கும் முக்தி பஞ்சாக்கரம் மொழியப்படுகிறது. மற்றும் அதற்கு அடுத்த பாடலில் "முன்னின்றாண்டாய்" எனச் சிவமுத லாகி நிற்க, 'எனை' யென்பதால் ஆன்மாவாகிய யகரம் அதனையடுத்து நிற்க, 'பின்னின்றேவல் செய்கின்றேன்' என நம இறுதியாக அனைத்தும் சேர்ந்து 'சிவயநம' என ஐந்தெழுத்து நிற்றற்குப் பொருளும் கூறிக்காட்டுகின்றார்கள். இங்ஙனம் எடுத்த எடுத்த இடங்கள்தோறும் ஐந்தெழுத்தின் பொருளும் அமைதியுமே காட்டிச் செல்கின்றனர்.

**அடிகளார் காலத்துச் சமயநிலை:**

பலவேறு சமயச்சூழல் அடிகளார் காலத்தும் இருந்தன என்பதைக் காட்டும் சான்றுகள் பலவுள்ளன. அறுவகைச் சமயத்து அறுவகை யோர்க்கும், வீடுபேறாய் நின்ற விண்ணோர் பகுதி' "இருமுச் சமயத்தொருபேய்த் தேரினை" என்பன கொள்கையால் வேறுபட்ட அறுவகைச் சமயங்கள் இருந்தன என்பதும், அவற்றில் சிக்கிய மக்கள் உண்மை காண மாட்டாது கானல் நீரைக் கருதிச்சென்ற மானினங்கள் போல மருண்டனர் என்பதுமாகிய தன்மைகள் உணர்த்தப்படுகின்றன. போற்றித் திருவகவலில் நாத்திகர், விரதமே பரமாகக்கொண்ட வேதியர்களாகிய கன்மப்பிரமவாதிகள், மாயாவாதிகள், உலகாயதர் முதலியோரும், தோணோக்கத்தில் புத்தர் முதலியோரும் குறிக்கப் பெறுகின்றனர். இவற்றினுடைய அடை மொழியையும் உவமையையும் கொண்டு அம்மதங்களின் இயல்புகள் விளங்குவதை யறியலாம். ஆனால் ஒன்று; அடிகளார் புத்தர்களைக் குறிப்பதுபோலச் சமணரைக்

குறிக்காமலிருப்பது கால ஆராய்ச்சி செய்வார்க்கு ஒருசிறிது துணையாகக் கூடும்.

**அடிகளார் காலத்துச் சைவநிலை:**

சைவத்திலும், மக்கள் உண்மையறிவிற் கருத்தின்றி, உடலைப் பற்றியதான சாதி முதலியவற்றில் அழுத்தமான பற்றுடையவர்களாயிருத்தலைக் கண்ட அடிகளார் மனம் நொந்து ஞானத்திற்கு இவை இடையூறாயிற்றே, மக்கள் செய்வனவிட்டுத் தவிர்வனவற்றைத் தாங்கி நிற்கின்றனரே எனத் திருவுள்ளத் தடைத்துச் 'சாதி குலம் பிறப்பு என்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறி' என்று கூறுகின்றார்கள்.

**நூல்களும், அவற்றைப் பற்றிய வரலாறும்:**

வேதமும் ஆகமமும் பல இடங்களில் பேசப் பெறுகின்றன. "பண்டாய நான்மறை" என வேதம் சிறப்பிக்கப் பெறுகின்றது. இதனைப் பற்றிய ஆராய்ச்சிகளும் மறுப்புரைகளும் பலவுள்ளன.

'மன்னு மாமலை மகேந்திர மதனிற் சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்' எனவும், 'மாவேட்டாகிய ஆகமம் வாங்கியும், மற்றவை தம்மை மகேந்திரத் திருந்து, உற்றவைம் முகங்களாற் றோற்றுவித் தருளியும்' எனவும் வரும் பகுதிகள் ஆகமத்தை இறைவன் கைலை மலையிலிருந்து, ஈசானாகி ஐமுகங்களால் அருளிச்செய்தனர் என்ற வரலாற்றை வகுப்பன. ஆனால் வேதம் நான்கு முகங்களிலிருந்தும், ஆகமம் உச்சி முகமாகிய ஈசானத்தினின்றும் தோன்றியதாக வரலாறு கூறும்.

**அடிகளார் காலத்துப் பருவநிலை:**

மார்கழி மாதம் பின்பனிக்காலம். அம் மாதத்தில் மழை பெய்யாது. பெய்தாலும் கருப்போட்டம் குலையும். பனி மிகுதியால் தாமரை கருவாகிவிடும் என்பது அனுபவம். ஆனால் நம் அடிகளார் திருவெம்பாவையில் மகளிர் மார்கழி நீராடச் செல்லுங்காலையில் மழை பெய்தது; தாமரைகள் மலர்கின்றன என்கின்றார். இக்கருத்தை "மழையே பொழியாய்" "பூத்திகழும் பொய்கை" "பங்கயப்பூம் புனல் பாய்ந்து" என்பவற்றால் அறியலாம்.

**பிறநூற் கருத்துக்கள்:**

குறள்: மிகப்பழைய இலக்கியம். தோன்றிய காலத்தே தனிப்பெருமை படைத்ததும் இதுவே. அதன் கருத்துக்களும் இந்நூலுள் இடம் பெற்றுள்ளன. "மற்றது வேண்டாமை வேண்ட வரும்" என்ற குறள் "வேண்டா தொன்றும்

வேண்டாது" எனவும், "தனக்கு உவமை யில்லாதான்" என்ற திருக்குறட்பகுதி "உவமனிலிறந்தன" "ஒப்புனக்கில்லா ஒருவன்" எனவும், "பற்றுக பற்றற்றான்" என்ற குறட்கருத்து "பற்றற நான் பற்றி நின்ற" "பற்றாங்கவையற்றீர் பற்றும் பற்றாங் கதுபற்றி" எனவும், "கற்றதன் பயன் வாலறிவன் நற்றாள் தொழலே" என்ற குறட்கருத்து, "கற்றாங்கவன் கழல்பேணினர்" எனவும் அமைந்துள்ளன. ஒரு பொருள் நுதலிய திருமுறைகளுக்குள் கருத்தொருமித்தல் இயற்கையே. ஆயினும் அக் கருத்துக்களே யன்றி அவை செறிந்த தொடர்மொழிகளும் அப்படி அப்படியே வந்துள்ளமை மிக வியக்கத்தக்கதொரு செய்தியாம்.

**உபநிஷதக் கருத்துக்கள்:**

வேதத்தில் விதிமார்க்கம் ஒழிந்தவை ஞான மார்க்கங்கள். அவை உபநிஷத்துக்கள். இவை வேதபுருஷனுடைய உச்சியென்று உரைக்கப்பெறுவன. அவற்றின் கருத்துக்கள் பல திருவாசகத்துக் கருத்தோடு ஒத்துள்ளன. 'எல்லா ஐசுவரியங்களாலும் நிறைந்த வரும், எல்லாவற்றிற்கும் இறைவரும் ஆகிய சிவபெருமான் இதயாகாயத்தில் இலங்குகிறார்' என்று அதர்வசிகை கூறுகிறது. இந்தக் கருத்து 'இமைப்பொழுதும் என்னெஞ்சில் நீங்காதான்' என்றதோடு ஒத்துள்ளது. இதனையே சுவேதாசு வதரம் 'எஞ்ஞான்றும் ஆன்மாக்களுடைய சிந்தையில் வீற்றிருப்பவர்' என்கின்றது. இவ்வாறே 'ஏகன்' என்பதை "ஏகோருத்ர: அத்துவிதீய:' எனவும், 'அநேகன்' என்பதை 'அநந்தரூபம்' எனவும், சிந்தையுணிற்றலை 'இருத் புண்டரீகம் விராஜம்' எனவும், 'சிறிய வாகப் பெரியோன்' என்பதை 'அணோர் அணியான் மகதோர் மஹீயான்' எனவும், 'இறைவன் ஓங்காரமாய் நின்ற மெய்யான்' என்பதை 'ஓமித்யேததக்ஷரம் ஆதௌ பிரயுக்தம் த்யானம் த்யாயிதவ்யம்' எனவும், 'ஸ: ஓங்காரமேவ ஓங்கார;' எனவும் விளக்கப்பெற்றுள்ளன. இவை போன்ற இரு நூற்றுக்கு மேற்பட்ட கருத்து ஒற்றுமைகள் ஆங்காங்குக் காணப்படுகின்றன.

**திருவாசகப் பேரொளி:**

ஒளியால் ஒளியை அறியலாமே அன்றி இருளால் ஒளியை அறிய முடியாது என்பது உலகறிந்த உண்மை. ஊன்றி நோக்கினால் ஒளியா ஒளியை அறிகிறது? இல்லை; உதவியாக இருக்கிறது ஓரளவு ஒளியை உடைய கண்கருவியாக நிற்க, ஒளி உதவ, ஒளியை ஏற்கும் பொருளை உயிர் அறிகின்றது என்பதே முடிந்த உண்மை. இந்த அடிப்படையை வைத்துத் திருவாசகப் பேரொளியை ஆராய்வோம்.

திருவாசகம் ஓர் ஒளிப் பிழம்பு; சூரியன் ஒளி போல. அதில், தோய்ந்து படிக்கின்ற நம்முடைய அறிவு கருவி; ஒளியை உடைய கண்போல, திருவாசகமாகிய சூரிய ஒளியின் துணையால் அருள் நிறைந்த தம் அறிவின் துணைக் கொண்டு, அனுபவத்தால் உணரப்படுகின்ற பேரொளி பரசிவமாகிய கடவுள். ஆகவே திருவாசகப் பேரொளி பரசிவமே. அப்பரசிவத்தைப் பரிபாகம் உறுகின்ற உயிர்களோடு என்றும் இணைய வைக்கும் ஒளிப் பிழம்பு திருவாசகம் என்பதே இவ்வாராய்ச்சி நூலின் உட்கிடை.

இதுவரை, திருவாசகம் அமைப்பு, அடிகளார் வரலாறு, இறைவனது அருளிச் செயல், அடிகளாரது அருளனுபவ நிலை, திருவாசகச் செஞ்சொற் கவி இன்பம் முதலியவற்றைப் பல கோணங்களிலிருந்து கண்ட நாம் பேரொளியை எங்ஙனம் நமக்குக் காட்டுகிறார் என்பதையும் ஆராய்தல் வேண்டும்.

அடிகளார் ஒளிப் பிழம்பாகப் பேரொளிப் பெருமானைக் காணுகின்றார். ஒரே ஒளி மண்ணெலாம் நிறைந்திருக்கிறது. மண்ணணு, விண்ணணு, நீரணு, தீயணு, எல்லாவற்றிலும் கலந்திருக்கிறது. விண்ணெலாம் நிறைந்திருக்கிறது. உற்றுற்று நோக்க ஒருகாலைக்கு ஒருகால் மிக்குத் தோன்றுகிறது.[7] அவ்வொளி புறப்பொருளை விளக்கும் பூத ஒளியன்றித் தன்னையும், தடைகளையும், தன்னை அறிபவர்களாகிய நம்மையும், விளக்கும் ஞான ஒளி ஆயிற்று. அவ்வொளி எல்லையின்றி எங்கும் பரந்த நிலையில், இருக்குமானால் சிற்றொளியை உடைய கண்கள் பொறுக்கமாட்டா என்னும் திருவுள்ளக் குறிப்பால் கொழுந்து விட்டெரிகின்ற சுடர்விளக் களவில் காட்சி வழங்கியது.[8]

ஒளி என்றால் நடுவில் கருமையும் உச்சியில் புகையுமாகிய மாசுகளும், அணுகவொண்ணாத வெப்பமும், இருக்கக்கூடுமே எனின் அக்குற்றங்கள் பௌதிக ஒளியாகிய விளக்கொளிக்கே அன்றி, இவ்வொளிக்கு இல்லவே இல்லை, இதுவும் அவ்வொளி அறிந்து கொள்ளுதற்கு உபாயமாம் என்கிறார். மலர்போலக் கண்ணுக்கு இனிமையும் தட்பமும் உடையதாக இருக்கும் என உரைக்கின்றார்.[9]

அவ்வொளி இயங்குவ நிற்பவான எல்லாப் பொருள்களிலும் ஒன்றியும், அவைகளுள் சித்தான உயிர்கள் தம்மையும் சடப்பொருள்களையும் அறிந்து கொள்ள உதவும் சோதியாக அவற்றின் வேறாயும், உயிர்கள் எல்லாவற்றையும் உணர உதவுகின்ற, ஞான ஒளியாக உடனாயும் இருந்து விளங்குகின்றது.[10] பார்வைக்குப் பேரொளியாகிய அது,

அனுபவத்துக்கு இன்பவெள்ளமாகிறது[11]. இவ்வண்ணம் அகண்டமாய், அருவாய், ஆனந்த அனுபவமாய் நின்ற பேரொளி; உயிர்களாகிய நம்மீது வைத்த கருணையால், மகேந்திரமலை, பஞ்சப்பள்ளி, சந்திரதீபம், மதுரை, திருவாதவூர், உத்தரகோசமங்கை. தில்லை, திருமுதுகுன்றம் முதலிய ஊர்களில் உருமேனி தாங்கி எழுந்தருளியும், கருணைக் கண்ணோக்கம் செய்கிறது[12]. அதனால் தெய்வம் என்பதோர் சிந்தையினால் வீடு காதலிக்கும் உயிர்களுக்குப் பொதுமையில் உதவி செய்கிறது. அம்மட்டோ? சிவஞானம் கைவரப் பெற்ற ஆன்மாக்கள் மறந்து விடாத வண்ணம் கருவார் சோதியாக ஒளிப்பொருளாகிய சூரியனுக்கு ஒளியை உதவுகிறது. மதிக்குத் தண்மையை வழங்குகிறது. தீயிடம் வெம்மையை வைக்கிறது வானுக்கோ, எல்லாப் பொருள்களும் கலந்து விளங்க இடந்தரும் ஆற்றலை உதவுகிறது. காற்றுக்கு ஆற்றலையும் நீருக்குச் சுவையையும் நல்குகிறது. அந்தந்தப் பொருள்களிடத்தில் அந்தந்த வண்ணமாய்க் கலந்து நிற்கின்றது[13]. இதனை நான் கண்ணாற் கண்டேன்; காண்க.

நான் கண்டபோது என்னுடைய நிலை எவ்வாறு இருந்தது என்றா கேட்கிறீர்கள்? ஆனந்தமாய் இருந்தது. "நான் கெட்டு அவனாகிப் பரவசமுற்றேன்." அந்த அனுபவத்தை நான் என்னென்று சொல்ல! "மகட்குத் தாய் தன் மணாளனோடு ஆடிய சுகத்தைச் சொல்லென்றால் சொல்லலுமாமே?" இருந்தாலும் ஓரளவு உரைக்க முயலுகிறேன். உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை ஆனந்த வெள்ளமாகப் பொழிந்தது. என்கண் இனிப்பு, காது இனிப்பு, வாய், உடல், எல்லாம் இனிப்பு. எல்லாம் கொம்புத் தேனாக இனிக்கின்றன. அத்தகைய அனுபவத்தில் நான் ஆழ்ந்திருக்கும் போது திடீரென்று அப்பேரொளி அடியார் கூட்டத்தையும், குருந்த மரத்தையும், அதன் குளிர்ந்த நிழலையும், உருமேனியையும், தன்னுள் ஒடுக்கியது. அடியேங் களைத் திருவடிச்சிறு மனையிலே சேர்த்துக்கொண்டது[14]. அப்போது நான் அனுபவித்த இரண்டற்ற இன்ப நிலையைப் பற்றி என்னென்று சொல்வது? அனுபவத்தை அள்ளி அள்ளிக் குடிக்கிறேன், அது வெள்ளமாகப் பெருகுகிறது. அது அமைவதாக இல்லை. விழுங்குகிறேன்; விக்கிக் கொள்கிறது. மயிர்க்கால்தோறும் பாய்கிறது. இவ்வண்ணம் இன்ப உடலை எனக்குக் கொடுத்தது. நானே முற்றிய கரும்பைத் தின்னும் யானைபோல ஆனந்த அனுபவத்தில் இருந்து கொண்டிருக்கிறேன். இது கிடைக்கக்கூடிய அனுபவமா!

இவ் வனுபவம் எங்கே கைநழுவிப் போய்விடுமோ என்ற அச்சம் என் மனத்தில் ஊசலாடிக் கொண்டிருந்தது. அதனால் என் உறுதியை உன்னிடத்தில் தெரிவித்துக் கொள்கிறேன். உண்மையாகச் சொல்லுகிறேன் “உன்னையல்லாது பிறதெய்வம் உள்ளத்தால் உள்ளேன்.” மயிர்க் கூச்செறிய, கண்ணீர்வார, நாத்தழுதழுக்க, நெஞ்சம் நெக்குருக, உன்னையே போற்று கின்றேன், என்னைக் கை விட்டுவிடாதே. என்னுடைய விருப்ப மெல்லாம் என்ன? ஊரார் பித்தனென்றும், பேயனென்றும், வாய்க்கு வந்தபடி ஏச நான் சாக வேண்டும். உன்னோடு ஒருகணமும் பிரியாது இருக்க வேண்டும்; இவ்வளவுதான்.

நீ கூறலாம், உனக்குத் தகுதி இல்லையென்று. உன் ஆற்றலோ அணுவை மலையாக்கும், மலையை அணுவாக்கும்; எல்லாம் வல்ல சித்தன் நீ. போனது போகட்டும்! இந்தப் பிறவியில் தகுதி இல்லையானாலும் வரும் பிறவியிலாவது திருவடியை அடையும் பேறு அருள வேண்டும். இவை அடிகளார் பேரொளியைக் கண்ட நிலையும் அதன் அனுபவமும் அதனால் விளைந்த மனப் போராட்டங்களும்.

இனி, அவர்கள் நமக்கு அப்பேரொளியைக் காட்டிய நிலையைச் சிந்திப்போம். இத்தகைப் பேரொளியைக் காண்பது என்பது எளிதான காரியம் அல்ல. முதற்கண் சூழல் நன்கு அமைய வேண்டும். இரண்டாவதாகக் கருவி நன்கு அமைய வேண்டும். மூன்றாவதாகக் கண்டார் கூறும் அனுபவக் கருத்துக்களில் உறுதி பிறக்க வேண்டும். நான்காவதாக அத்துறையில் இடையீடில்லாத உழைப்பு வேண்டும். மடையில்லா வாய்க்கால் பாய்ச்சலுக்குப் பயன்படாது. தடை இல்லாத இன்பமும் இனிக்காது. பேரொளி யைக் காண்கின்ற வகையிலும் உடன் பிறந்தே கொல்லும் வியாதி போலுள்ள அறியாமையும் ஆணவமும் தடை செய்யும். அவற்றை நீக்கி ஆனந்த வெள்ளத்தை நமக்கே ஆக்கிக் கொள்ளும் ஆற்றல் வேண்டும். இதற்குச் சூழல் இன்றியமையாதது.

மாணவன் மாணவச் சூழலிலே வளர்வானானால் அவனுடைய கல்வி மாண்புறும். அதுபோலவே விஞ்ஞானி களும் மெய்ஞ்ஞானிகளும் அவரவர்கள் சமூகத்திலும் இடைவிடாது பழகுதல் வேண்டும். “நின் அடியாருடைய கூட்டுகண்டாய்” “அடியார் அடிக்கூட்டிய அற்புதம்” என்பன போன்ற பகுதிகளால் இதன் இன்றியமையாமையை எடுத்து விளக்கி இருக்கின்றேன். மேலும் பாருங்கள்: உயிர்களாகிய நாம்

சார்ந்ததன் வண்ணம் ஆவோம். ஆதலால் அடியவர்களோ "காணுங்கரணங்கள் எல்லாம் பேரின்பம் எனப் பேணுபவர்கள்" "ஓடும் கவந்தியுமே உறவு என்றிட்டு உள்கசிந்து, தேடும் பொருளும் சிவன் கழலே" எனத் தெளிந்தவர்கள். அவர்களோடு இடைவிடாது பழக நமக்கும் அந்நிலை உண்டாம் அன்றியும் அவர்கள் தமது சிவானுபவத்தை உபதேசிப்பார்கள். அவ்வுபதேசங்கள் ஏட்டுச் சுரைக்காயாக இல்லாமல், வெறும் எண்ணக் கோட்டைகளாக இல்லாமல் தம் அனுபவம் கூறும் ஆனந்தத்தேனாக இருக்கும். கேட்கின்ற நம்முடைய உள்ளத்தை யெல்லாம் தொடும். உணர்ச்சியைக் கிளர்ச்சி செய்யும். ஆதலால் எம் அனுபவத்தையும் கேளுங்கள் என்றார்.

யானை முதல் எறும்பு ஈறாக எத்தனையோ பிறவி எடுத்தேன்[15]. ஏதோ கொஞ்சம் புண்ணியத்தால், மனிதப்பிறவி கிடைத்தது. இது கிடைக்க அன்னையின் கருவுட்பட்டு நான் பட்ட அவதிகள் எத்தனை, பத்து மாதங்களும் கழிந்தன. குழந்தையாகவும் பிறந்தேன்[16]. காலையில் மலங்கழிக்கும் போது துன்பம்; பசி, நித்திரை, பயணம், வேலைகள் இவற்றாலெல்லாம் துன்பம்; இத்தனையிலும் தப்பிப் பிழைத்தேன். ஆண்டு பதினாறு ஆயிற்று; காளைப் பருவம்; உடலுக்கு ஊறு இன்பத்தேவை உண்டாயிற்று; அது காதல் பசியாகக் கனிந்தது; காதற்பசிக்கு விருந்தாகக் காரிகையார் கடைக்கண் பார்வை கிட்டியது. அதிலும் அகப்பட்டு தட்டுத் தடுமாறிக் கரை ஏறினேன். இதற்கிடையிலே பதவி, அதிகாரம், ஆட்சி, என்கிற பேராசைப் பெருங்களிறுகளின் அட்டகாசம்; இதிலும் ஒருவாறு தப்பிப் பிழைத்தேன். கல்வியில் நல்விற்பன்னன் நான்தான் என்ற செருக்குத் தலைக்கு ஏறிவிட்டது. அது கடல்வெள்ளம் போல என்னைச் சூழ்ந்து, அல்லல் தந்து, தவிக்கச் செய்தது. அதிலும் தப்பினேன். அந்நிலையில் பணத்தாசையால் நான் அல்லலுற்ற போது வறுமை என்னும் விடப்பாம்பு கடித்தது; அதிலும் தப்பினேன். அப்போது எனக்கு ஓர் எண்ணம் உண்டாயிற்று. இந்நிலையில் மனிதன் திரை கடல் ஓடுகிறான்; திரவியம் தேடுகிறான். அவனால் இன்பம் எய்த முடிகிறதா? இல்லையே, அவனவனுடைய பாவ புண்ணியப் பரிபாகங்களுக்கேற்பத் துன்ப இன்பங்களை அளந்து ஊட்டும் பரம்பொருளொருவர் உண்டு என்ற கருத்தும் பிறந்தது. அது துன்பம் கலவாத இன்பமயமானது. அதனை அடைந்தவர்களுக்கும் இன்பமே; எந்நாளும் துன்பமே இல்லை. எப்படியாவது அதனை அடைந் தேதீரவேண்டும் என்கிற அவா உண்டாகிறது.

அதனால் அப் பரம்பொருளை அடையும் உபாயங்கள் யாவை? உரைப்பவர் யார்? என்ற ஆய்வு தோன்றுகிறது. அந்நிலையில் நாத்திகர்கள் வந்தார்கள் ஐயா! 'ஏதோ இருக்கிற வரையில் உண்டு உடுத்து களிப்பாகக் காலங் கழிப்பதை விட்டுக் கடவுள் என்று எண்ணி ஏமாறாதே. கடவுள் சோம்பேறிகள் கைப்பிடிக்கும் காதலி; கற்பு என்பது செயலற்றவர் கைமருந்து' என்றெல்லாம் நாத்தழும்பு ஏற நவின்றனர். இவற்றிலெல்லாம் என் மனம் ஈடுபடவில்லை, அமைதியும் காணவில்லை.

தலையில் தீப்பிடித்தவன் போல் உய்யும் நெறிதேடி ஓடினேன் அப்பன், அம்மை, அண்ணன், தம்பி, மாமன், மாமி, மனைவி மக்கள் என்ற சுற்றத்தார்கள் வந்தார்கள். சூழ்ந்து கொண்டார்கள். 'நாங்கள் இத்தனை பேரும் உங்களை நம்பித்தானே வாழ்கின்றோம்? எங்களைக் காப்பதுதான் தங்கள் கடமை கடமையைச் செய்வதே உய்யும்நெறி' என்று வற்புறுத்தினார்கள். அதிலும் மனம் ஈடுபடவில்லை. வேதியர் வந்தனர்; சாத்திரங்களைச் சான்றாகக் காட்டினார். 'கர்மங்களைச் செய்வதே உய்யும் நெறி' என்று உரைத்தனர். அதிலும் மனம் அமைதியுறவில்லை. புத்தர், சமணர் முதலான சமயவாதிகள் வந்து தம் சமயக் கொள்கையே மெத்தவும் நல்லதென்று புலம்பினர். மாயாவாதம் என்னும் சண்டமாருதம் வீசியது. உலகாயுதம் என்னும் நல்லபாம்பு கடித்தது. இத்தனை துன்பங்களும் இன்ப வேடந்தாங்கி என்னை மயக்கின.

இத்தனைக்குந் தப்பிப் பிழைத்தேன். ஆனாலும் பரம் பொருளை பற்றக்கூடிய உபாயம் உணராது வருந்தினேன். அவனருளே கண்ணாகக் காண விரும்பி அவனிடமே விண்ணப்பித்தேன். அவன் 'பக்தி வலையிற் படுவேன்' என்று உணர்த்தினர்ன். அதனால் அன்பென்னும் அருந்துணை கிடைத்தது. ஆனந்தக்கடலில் மூழ்கினேன். அன்பைப் பற்றிய ஆராய்ச்சி பிறந்தது.

அன்பு, உயிர்களாகிய நம்முடைய பிரிக்க முடியாத குணம் - அன்பு காரணமாகவே உயிர் உடலோடு பிணைந்திருக்கின்றது என்றால் வேறு சான்று வேண்டுமா? சமய வாழ்வில் அன்பிற்குக் கொடுக்கப்பட்ட இடம் மிக உயர்ந்தது. 'அன்பே சிவம்' என்கிறார் தமிழ் மூலர். அன்பைக் கடவுளாக முதன்முதலிற் கண்ட பெருமை தமிழனுக்குத் தான் உரியது. பின்னர் அனைத்துலகமும் அதனை அறிந்து போற்றுவ ஆயின. உயிர்க் குணமாகிய அவ்வன்பை உயிரினிடமாக முகிழ்க்கச் செய்ய வேண்டும். மலரச் செய்ய வேண்டும்.

உயிரின் இயல்பாகிய அன்பை முகிழ்க்கச் செய்ய இவ்வளவு முயற்சியா? எனலாம். மணிக்கு ஒளி இயற்கைதான்; ஆனாலும் ஒளியை வெளிப்படுத்தச் சாணை பிடித்தல் முதலிய முயற்சி தேவை இல்லையா? சிந்தியுங்கள். தக்க வகையில் முயற்சித்து அன்பை முகிழ்க்கச் செய்து விடுவோமானால் அவ்வன்பு கொடிபோலப் பலபொருளில் சென்று படரும். அதனால், அந்தந்தப் பொருள்களும் அன்பு மயமாகி நம்மை வந்து பற்றும். அன்பால் அகிலத்தையும் வாங்கலாம். அகிலம் அன்பால் நம்மை வாங்கிவிடுகிறது! இவ்வளவுதான்.

இவ்வகைக் கலப்பினால் அங்கும் இங்கும் எங்கும் இன்பம் விளைகிறது. எல்லோரும் இன்புற்றிருக்கிறோம். இதனாலேயே செந்தமிழ் ஞானச் செல்வர்கள் அன்பையும் இன்பையும் இறைப் பொருளாகவே கண்டார்கள். ‘இன்பமே என்னுடைய அன்பே’ என்றார்கள். ‘அன்பினில் விளைந்த ஆரமுதே’ என்று சுவைத்தார்கள்.

அன்பின் பயனாகிய இன்பம் என்றும் மாறாமல் அழியாமல் அனுபவிக்கப்படுவது ஒன்று; மலர்மணல் போல மின்னொளி போலத்தோன்றி மறைவது மற்றொன்று. இவ்வண்ணம் இருவகையாக இன்பம் இருக்கிறது. இவ் வின்பம் என்பது ஒரு பண்புதானே; அது ஒரு தன்மையாகத்தானே இருக்க வேண்டும்; என வினவலாம். மல்லிகைப்புதரில் பூக்கள் பூத்திருக்கின்றன, அவை கண்ணையும் மூக்கையும் கவர்கின்றன. அன்பு செலுத்துகிறோம்; பறித்துச் சூடுகிறோம். அதனால் விளையும் இன்பம் சிலமணி நேரம்தான். அவற்றிடம் செலுத்தும் அன்பிற்குக் குறை இல்லை. பறித்துச் சூடும் முயற்சியிற் குறை யில்லை; ஆனாலும் இன்பம் நிலைத்திருக்கவில்லை. இதனால் அறியப் படுவதென்ன? செலுத்தப்படுகின்ற பொருளின் குறையே என்று உணர்கின்றோம்; பொருளினுடைய அழகும், குணமும், மணமும் மாற இன்பம் இல்லையாகிறது. இவ்வளவு தான்.

மாறாத இன்பமும் அழியாத அழகும் உடைய அநாதி நித்தியப் பொருளிடத்தில் அன்பு செலுத்தப் படுமானால், அதனால் விளையும் இன்பமும் நிலைத்திருக்குமே என்ற எண்ணம் உண்டாயிற்று. அப்பொருள் எப்பொருள்? என்ற ஆய்வும் தோன்றியது. அதன் விளைவுதான் அநாதிய நித்தியப் பொருள் பரசிவம் ஒன்றே என்ற உணர்ச்சி.

சிவபரம் பொருளிடத்து இடையீடில்லாத பற்றுள்ளம் விளைந்தது, அதனால் சித்தம் சிவமாயிற்று. தீயைச் சார்ந்த

மெழுகுபோல சித்தம் உருகியது, மெய் சிலிர்த்தது. கண்ணீர் அரும்பியது. ஆனந்தம் தலைக்கு ஏறியது. அதனால் என்னை நான் மறந்தேன்; மானம் அகன்றது; ஆடினேன்; பாடினேன்; "நாயகன் சேவடி தைவரு சிந்தையால்" கற்றாமனமெனக் கதறினேன். இறைவன் உருவாக எழுந்தருளினான். அடியேன் அதனைச் சிறுமை என்று இகழாமல் அவனை அன்றி அனுபவிக்கப்படும் பொருள் வேறு இல்லாமையால் என் கண் காது உடல் உள்ளம் எல்லாம் அவனையே அனுபவிக்கத் தொடங்கின. அப்போது "தயாவான தற்பரனே தாயாகி என்னை நீ வளர்த்தாய் இன்றெனக்கு உறவு யார்? அடியேனை அடிமை கண்டாய் என்னை விட்டு விடலாமா?" என்றெல்லாம் போற்றினேன்; புகழ்ந்தேன்.

"என்றனை உய்யக் கொள்வாய்" "உன்னைக் கூடும் வண்ணம் இயம்பாய்" என்றெல்லாம் வேண்டினேன். இறைவன் என்னையும் ஒரு பொருளாக்கி "நாய் சிவிகை ஏற்றிவைத்த அம்மை எனக்கு அருளினான்." இந்நிலை வேறு எவரால் அடைய முடியும்! என்று உள்ளம் பதிய உபதேசிக்கிறார்கள்.

ஆதலால் நாமும் அன்பினால் அருளுபதேச நெறி நின்று ஆனந்தத்து அழுந்தி அதீதத்தை அண்மிப் பேரொளியைக் கண்டு பேரின்ப வாழ்வு வாழ வேண்டும். இதுவே திருவாசகப் பேரொளி நமக்குத் தெரிவிக்கும் செந்நெறி.

இவ்வளவில் இச் சுவைக்கும் பகுதியை நிறுத்தி இவ் வொளியைக் காட்டிய உத்தமராகிய மணிவாசகப் பெருமான் வாழ்ந்த காலத்தை அறிய முற்படுவோம்.

**அடிகளார் காலத்தைப் பற்றிய குறிப்புக்கள்:**

இன்று வரையில் அடிகளார் வாழ்ந்த காலம் ஆராய்ச்சிப் புலவர்களுக்கு அறிவுவிருந்தாக வளர்ந்துகொண்டே வருகிறது. அடிகளார் பெற்ற அருளனுபவநிலை யாராலும் அளப் பரியதாதல் போல அவர்களைப் பற்றிய கால ஆராய்ச்சியும் இன்றுவரை முடிவுபெறாத ஒன்று எனலாம். ஆராய்ச்சியின் முடிவுக்கு முற்றுப்புள்ளி வைக்கும் நிலையில் இதுவரை யாரும் எழுதவில்லை. அடியேனும் அப்படியே. ஆயினும் அடிகளார் காலத்தையறிய நம் நாட்டுப் பேரறிஞர்களேயன்றி, மேனாட்டறிஞர்கள் பலரும் முயன்றுள்ளனர். எல்லார் கருத்துக் களையும் தொகுத்து எழுதியும், இப்போது கிடைக்கும் சாதகங்களைக் கொண்டும் ஓரளவு துணிந்து, இனிக்கிடைக்கும்

சாதனங்களைக் கொண்டு இவ்வழியிற் பலரையும் பயன்படுத்திக் கொள்வதே இத் தலைப்பின் நோக்கம்.

அடிகளார், கடைச்சங்கக் காலத்திற்குப் பின் கி.பி. பதினான்காம் நூற்றாண்டிற்கு இடையில் வாழ்ந்தவராக ஆராய்ச்சியுலகம் கருதுகிறது. அவரவர்கள் ஆராய்ச்சிகளை முழுதும் தொகுத்து எழுதி, அவரவர்கள் கூறுங்காலத்தைத் தடைவிடைகளோடு குறிப்பதாயின் கட்டுரை மிக விரிவதோடன்றிப் பிசைந்த மாவைப் பிசைதல் என்னும் குற்றமுமாகும். ஆதலால் அவற்றைத் தொகுத்து அடுத்த பக்கத்தில் ஒரு பட்டியல் தந்துள்ளோம்.

இவருள் ஒன்பதாம் நூற்றாண்டிற்கு முன் என்பார் பதினொருவர். ஒன்பதாம் நூற்றாண்டும் - அதன் பின்னரும் என்பார் பதினொருவர். ஆனாலும் ஒன்பதாம் நூற்றாண்டு என்பதே பின்னர்க் கிடைக்கின்ற ஆராய்ச்சிக் குறிப்புக்களால் வலியுறு கின்றது. அவற்றை யாராய்ந்து ஓரளவு முடிவு காண்போம்.

பின் என்பதற்குரிய காரணங்கள்:

1. அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்ற முறைவைப்பு.

2. திருமுறைகளின் முறைவைப்பு.

3. சுந்தரர் மாணிக்கவாசகரைத் திருத்தொண்டத் தொகையிற் கூறாமை.

4. பொன்னம்பலம் எனத் தில்லை மன்றை வழங்குவது.

5. வரகுணனைக் குறிப்பது.

6. மாயாவாதத்தைப் பற்றிக் குறிப்பது.

7. ஆகமம், மும்மலங்கள் என்ற சொல்லாட்சிகள்.

8. பாவினங்களைப் பயில்வது.

9. சதக முதலிய பிரபந்த வகையாலும், அந்தாதித் தொடையாலும் பாடியது.

| காலம் | அறிஞர் பெயர் | நூற் பெயர் |
|---|---|---|
| கி.பி. 1 அல்லது 2ஆம் நூற்றாண்டு | திருமலைக் கொழுந்து பிள்ளை பரிதிமாற் கலைஞர் T. பொன்னம் பலப்பிள்ளை | தமிழ் வரலாறு |

| | | |
|---|---|---|
| 3ஆம் நூற்றாண்டு | மறைமலையடிகளார் | மாணிக்க வாசகர் வரலாறும் - கால ஆராய்ச்சியும் பக்.180-2 |
| 4ம் நூற் - முன் | கா. சுப்பிரமணிய பிள்ளை M.A.M.L. | தமிழிலக்கிய வரலாறு |
| ஷை பிற்பகுதி<br>4 அல்லது 5ம் நூற்றாண்டு | K.G. சேஷையர்<br>K.S. இராமசாமி சாஸ்திரிகள் | |
| 2க்கும் 7க்கும் இடைப்பட்டது | திருச்சிற்றம்பலம்பிள்ளை<br>C.K. சுப்பிரமணியமுதலியார் | மாணிக்க வாசகர் |
| தேவார ஆசிரியர்க்கு முற்பட்டவர் | K.A. நீலகண்ட சாஸ்திரியார் M.A. | |
| 7 அல்லது 8ம் நூற்றாண்டு | வில்ஸன் (Wilson)<br>G.U. போப் (Pope) | |
| 8க்கும் 10க்கும் இடையில் | கூடி (Gudie) | |
| 9ம் நூற் | இன்னஸ் (Innes)<br>நெல்ஸன் Nelson)<br>தஞ்சை ஸ்ரீநிவாச பிள்ளை B.A.B.L<br>M. சீநிவாச அய்யங்கார்<br>அனவரத விநாயகம் பிள்ளை M.A.<br>T.P. பழனியப்ப பிள்ளை M.A. | Madura Dt. Manual P.147<br>தமிழ்வரலாறு 2ம் பக்கம்.<br>Tamil Studies P.54, 405<br>தமிழ்ப் பெருமக்கள் வரலாறு P.298.<br>Journal of Sri Venkateswara Oriental Institute Vol 4 |

| | | |
|---|---|---|
| | ஔவை துரைசாமிப் பிள்ளை<br><br>T.V. சதாசிவப் பண்டாரத்தார்<br><br>வையாபுரிப்பிள்ளை. | சைவ இலக்கிய வரலாறு. P.298-314<br><br>பாண்டியர் வரலாறு |
| 10ம் நூற் | T.A. கோபிநாத ராவ் | |
| 13, 14ம் நூற் | டாக்டர் ரோஸ்ட் (Dr. Rost) | Encylopaedia Brittanica Tamils. |

(இக்குறிப்புக்கள் பின்வந்த ஆராய்ச்சி நூல்களிலிருந்தும் அவற்றைத் தொகுத்தெழுதிய பிற கட்டுரை நூல்களிலிருந்தும் எடுக்கப்பெற்றவை.)

10. மகளிர் செயல்களாக அமைக்க முற்பட்டது.

11. திருவிசைப்பா ஆசிரியர்கள் இவரைக் குறியாமை.

12. பத்தாம் நூற்றாண்டுக்கு முந்திய உரை நூல்களில் இவர் பாடல்களும் பாடற்பகுதிகளும் எடுத்தாளப் பெறாமை.

13. 'கலையார் அரிகேசரியாய்' எனல்.

14. தில்லையில் திருமால் கிடந்த கோலமாக விளங்குதலைக் குறித்தமை.

15. திருக்கோவையாரின் கிளவியமைப்பு என இவை. இவற்றுள் வலியுடைய காரணங்கள் எவையென ஆராய்ந்து ஒன்பதாம் நூற்றாண்டே அடிகளார் வாழ்ந்த காலம் என்று துணியலாம்.

i. பெயர் முறைவைப்பும் திருமுறைகளின் முறைவைப்பும்:-

அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற முறை ஒன்றும், சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர் என்ற முறை ஒன்றும் வழங்கி வருகிறது. நம்பியாண்டார் நம்பிகள் சம்பந்தரை முதல்வராகவும் - மாணிக்கவாசகரை நான்காமவராகவும் வைத்து வழங்கினர். அம்முறையே பின்னுள்ளோரால் பின் பற்றப்பட்டன.[17] இந்த முறையும் திருமுறைகளின் முறைவைப்பைப் பொறுத்ததே. பட்டினத்தடிகளும் வித்தகப்பாடல் முத்திறத்தடியவர்களைக் கூறிப் பின் திருந்திய அன்பிற் பெருந்துறைப் பிள்ளையைக் கூறுகின்றார். பூந்துருத்தி நம்பி

காடவ நம்பி ஒன்பதாந் திருமுறைக் கோயிற்பதிகத்தில் மூவரைக் குறித்து மாணிக்கவாசகரைப் பற்றிக் குறிக்கவில்லை. திருக் களிற்றுப்படியாரும் அங்ஙனமே முதன் மூவர் வரலாற்றையே குறிக்கிறது. ஆகவே எவ்வகையினும் மாணிக்கவாசகர் நான்காமவராகவே குறிக்கப்பெறுகின்றார். ஆனால் இது காலமுறையால் எனற்கு ஏற்ற சான்றுகள் இல்லை. திருமுறை பாடற்றொகையும் திருமுறை முறைவைப்பும் காரணமாகலாம் என்பது பலர் ஆய்ந்து கண்ட முடிவு.

ii. சைவ மரபுணர்ந்த பெருமக்கள் சமய ஒழுக்கங்களைச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என முறைப்படுத்தி வழங்குவர். இவைகள் முறையே தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன் மார்க்கம் என வழங்கப்பெறும். இவைகள் முறையே அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்பவர் களால் நடந்து காட்டப்பெற்ற நெறிகள். இம்முறை பற்றியே சைவத் தமிழுலகம் அப்பர் சம்பந்தர் சுந்தரர் மாணிக்கவாசகர் என வழங்கலாயிற்று, காலமுறை பற்றித் திருமுறைகள் தொகுக்கப்பட்டிருக்குமாயின் ஏழாம் நூற்றாண்டினராகிய, ஐயடிகள் காடவர் கோன் சம்பந்தர் அப்பரையடுத்து இடம் பெற்றிருக்க வேண்டும். அஃதில்லாமையே இக் கருத்தை வலியுறுத்தும்.

iii. சுந்தரர் மாணிக்கவாசகரைப் பற்றித் திருத்தொண்டத் தொகையுட் கூறாமை:-

திருத்தொண்டத்தொகை தொண்டர்களைத் தொகுத்துக் கூறுவதற்கென்றே திருவருள் வாய்ப்பாக எழுந்த பதிகம், வாதவூரடிகள் அன்றே ஆவியும் உடலும் உடைமையெல்லாமும் இறைவன் கொள்ளக் கொடுத்த அடியார் பெருமகன். அங்ஙனமிருந்தும் அவர் கூறப்பெறவில்லை என்பது சிந்திக்க வேண்டிய ஒரு காரணந்தான். இதற்குரிய அமைதி காலவேறு பாடே எனல் இழுக்காகாது.

iv. 'பொன்னம்பலம்' எனத் தில்லையம்பலத்தை வழங்குவது. கூத்தப்பெருமான் நடமாடுகின்ற மன்றம் முதன்முதல் பொன்வேயப் பெற்றது இரணிய வன்மன் காலத்தில் என்று கோயிற்புராண முதலிய புராண வரலாறுகள் தெரிவிக்கின்றன. இது கல்வெட்டாய்வுக்கும் இயைவதாகின்றன. இரணியவன்மன் கி.பி. 436 முதல் 458 வரை அரசாண்டவன் என்பதை எமது 'சிதம்பரம்' என்ற நூலிற் காணலாம். பின்னர் முதற்பராந்தகன் (கி.பி. 907-914) பொன்வேய்ந்தான். பின் முதற் குலோத்துங்கன்

(கி.பி. 1070-1120) பொன்வேய்ந்தான் என்று கல்வெட்டுக்கள் குறிக்கின்றன. ஆகவே முதன் முதற்பொன் வேய்ந்தவன் இரண்யவன்மனும், பின்னர் அதைப் புதுக்கியவர்கள் ஏனைய சோழ மன்னர்களும் ஆகின்றார்கள். ஆகவே இரண்யவன்மன் காலத்தேயே பொன்னம்பலம் என்ற வழக்குண்மை பெறப்படும். இது அடிகள் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்பதற்கு உற்ற சான்றாகாது.

v. வரகுணனைக் குறிப்பது: - அடிகளார் திருக்கோவை யாரில் வரகுணன் பெயரை வெளிப்படையாகக் குறிக்கின்றார். திருவாசகத்தில் 'நரகொடு சுவர்க்கம் நானிலம் புகாமல் பரகதி பாண்டியர்க் கருளினை போற்றி' என்ற செய்தி குறிக்கப் பெறுகின்றது. ஆனால் இச்செய்தி வரகுணனைக் குறிப்பதாகாது. மலயத்துவச பாண்டியனுக்கு வீடருளிய செய்தியைக் குறிக்கலாம் என்பர் மறைமலையடிகள். ஆனாலும் வர குணனுக்குச் சிவலோகம் காட்டிய வரலாறுதான் திருவிளையாடற் புராணங்களில் இடம்பெறுகின்றன. ஆதலால் பாண்டியன் என்றது வரகுணனையே குறிப்பது என்பதும் மலயத்துவசன் தடாதகையாரைப் பெற்றுச் சௌந்தர பாண்டியனாக வந்த சோமசுந்தரக் கடவுளுக்குக் கொடுக்குமளவு புண்ணியம் பெற்றிருந்தானேயன்றி, நரகொடு சுவர்க்கம் புகாமையாகிய இருவினையொப்புப் பெற்றுச் சிவலோகம் எய்தும் திறனிலன். மகட்கொடை ஒன்றாலேயே உரிமையுடையவன் என்றுரைப்பாருளராயின் தக்கனும் இரவானும் சிவலோகஞ் சேர்ந்தார்களா என்றும் சிந்திக்க வேண்டும். ஆதலால் பரகதி பெற்ற பாண்டியனும், திருக்கோவையாருட் கூறப்பெற்ற சிற்றம்பலம் கண்ட பாண்டியரும் ஒருவரே. அதுவும் வரகுணனேயாதல் தெளிவு.

வரகுணனைப் பற்றிப் பாராட்டிய தெய்வப்புலவர்கள் திருவாதவூரடிகளும் பட்டினத்தடிகளும். இவருள் பட்டினத் தடிகள் பத்தாம் நூற்றாண்டினர் என்பது முடிந்த முடிபு. பட்டினத்தடிகள் திருந்திய அன்பின் வாதவூர்ப்பிள்ளையைப் பாராட்டுகிறார். ஆகவே இருவரும் பாராட்டிய வரகுணன் யார் என்பது ஆராயவேண்டிய ஒன்று. இடைக்காலப் பாண்டியருள் வரகுணன் என்ற பெயருடையார் இருவர் இருந்திருக்கிறார்கள். தமிழ்நாட்டு மரபுப்படி முதல் வரகுணன் பெயரனே இரண்டாம் வரகுணன். இவன் முதல் வரகுணன் மகனாகிய சீமாறன் சீவல்லபனுக்கு மகனாவான். கி.பி. 862 முதல் 880 வரை அரசாண்டவன். இவனைப் பற்றிய செப்பேடுகள்

"குரைகழற்கால் அரசிறைஞ்சக் குவலய தலம் தனதாக்கின, வரைபுரையும் மணி நெடுந்தேர் மன்னவர்கோன் வரகுணன்" என்று குறிப்பிடுகின்றன.

முதல் வரகுணன் கி.பி. 792 முதல் 835 வரை அரசாண்டவன், ராஜசிம்ம பாண்டியனுடைய மகன். சின்னமனூர்ச் செப்பேடுகளில் "கொற்றவர்கள் தொழுகழற்கால் கோ வரகுண மகாராசன்" என்று புகழப்பெற்றவன். இந்த இரு வரகுணர்களையும் பற்றிய இரு சொற்றொடர்களையும் ஆராயும் போது முதல் வரகுணன் தோல்வியே இல்லாதவன். முடிமன்னர் போற்றும் அணிகளையுடையவன். மகராஜன் என்று அறிகிறோம். இரண்டாம் வரகுணனைப் பற்றிய 'தனது ஆக்கின', என்ற சொற்றொடரால் இவன் தந்தையின் காலத்தில் நாடு பிறர் வயப்பட்டு இருந்தது என்றும், அதனைப் பலமுறை படையெடுத்துச் சென்று தோல்வியும், வெற்றியும் மாறி மாறிக் கண்டுபிறகு வெற்றி கண்டான் என்ற செய்தி அறியப்படுகிறது. முதல் வரகுணன் காலத்துச் சோழநாட்டுப் பெரும் பகுதி அவன் ஆட்சியில் இருந்தது என்பதை அக்காலத்து அரசாண்ட தந்திவர்மன் பல்லவன், (775-826) கல்வெட்டுகள் சோழ நாட்டில் இல்லாமையே குறிக்கத்தக்க சான்றாகும். அங்ஙனம் சிறப்பெய்திய முதல் வரகுணனையே நம்பியாண்டார் நம்பிகள் "பொடியேர்தரு மேனியனாகிப் பூசல்புக அடிக்கே, கடிசேர்கணை குனிப்பக்கண்டு கோயிற் கருவில்லார் அடியேபட அமையும் கணைவென்ற வரகுணன்" என்று கூறுவதாலும் துணியலாம். பகைவன் விட்ட அம்புகள் சிவனடி மறவாத சிந்தையாளராகிய வரகுண பாண்டியன் மேற்படாமல் திருவடிக்கண் வந்து வீழ்ந்தன என்று நம்பிகள் கூறும் பெருமையுடைய வரகுணனும், மாணிக்கவாசகரால் "வரகுணனாம் தென்னவன் ஏத்தும் சிற்றம்பலத்தான்" என்றும், "சிற்றம்பலம் மயலோங்கு இருங்களியானை வரகுணன்" என்றும், பாராட்டப் பெறுபவனும் முதல் வரகுணனே ஆதல் தெளிவாம். அவன் காலம் கி.பி. 775-826. ஆதலால் எட்டாம் நூற்றாண்டின் முற்பகுதியில் வாழ்ந்த அவனையே இவர் அறிந்தவர் என்று துணியலாம். ஆதலால் அவர் ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியினர் என்பது உறுதி. T.V. சதாசிவ பண்டாரத்தார் அவர்கள் வரகுணன் ஆட்சி நான்காம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் திருவியலூர், சாமிமலை முதலிய தலங்களிலும்; எட்டு, பத்தாம் ஆண்டுக் கல்வெட்டுக்கள் திருச்சிராப்பள்ளி முதலிய பல தலங்களிலும் காணப்படுவதால் பல்லவ ஆட்சி ஒடுங்கி அவன்

ஆட்சியே சோழ நாட்டில் சிறந்திருக்க வேண்டும் என்று கூறுகின்றார்.

**மாயாவாதத்தைப் பற்றிய குறிப்பு:** - ஏகான்மாவாதமே மாயா வாதமும், பார்கரிய வாதமும், கிரீடாப் பிரம வாதமும், சத்தப் பிரமவாதமுமென நான்கு வகைப்படும். அவற்றுள் மாயாவாதம் 'சச்சிதானந்தமாய், மித்தமாய் வியாபகமாய் இருப்பது பிரமம் என்றும், அது ஒன்றே உண்மையில் மெய்ப் பொருள் என்றும், மற்றவை எல்லாம் பிரமத்தின் மாற்றங்கள் என்றும், அது உலகம் இப்பியில் வெள்ளிபோல அவிச்சையினால் காணப்படுவன. அதற்கு முதற் காரணமாகிய மாயை பிரமம்போல இல்லாத பொருளுமன்று. இன்னதென்று சொல்லொண்ணாததாய் இருக்கும். இந்த மாயைக்கு மாறாகப் பிரமமே நான் என்று வேதாந்த ஞானத்தால் அறிவதே முத்தி' என்றும் கூறுவது. இந்த மாயாவாதம் தென்னாட்டில் ஆதிசங்கராச்சாரியர் காலத்தில் தான் பரவியது. மணிவாசக அடிகள் போற்றித் திருவகவலில் "மிண்டிய மாயா வாத மென்னும் சண்டமாருதம் சுழித்து அடித்து ஆர்த்து" என்று கூறலின் மாயாவாதம் பரவிய காலமாகிய சங்கரர் காலத்திற்குப் பின் இருந்தவர் ஆதல் வேண்டும் என்பர் பலர். இப்போது சங்கரர் காலத்தைத் துணிய வேண்டிய இன்றியமையாமை ஏற்பட்டுவிட்டது. இன்னஸ் என்பர் (Innes) சங்கரர் காலம் கி.பி. 778 முதல் 820 வரையில் என்பர் (ராமசாமி சாஸ்திரிகள் முதலியோர் கி.பி. முதல் நூற்றாண்டில் இருந்தவரென வற்புறுத்துகிறார்கள்.) K.A. நீலகண்ட சாஸ்திரி அவர்கள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு சங்கரர் வாழ்ந்த காலம் என்ப) தெலாங் (Telong) என்பவர் கி.பி.6 ஆம் நூற்றாண்டு என்பர். R.G. பந்தர்க்கார் முதலியோர் கி.பி. 6ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்பார்கள். மாக்ஸ் மில்லர் முதலியோர் கி.பி. 788 - 820 க்கு இடைப்பட்ட காலம் என்பார்கள். பேராசிரியர் கீத் (Prof.Keith) முதலியோர் 9-ஆம் நூற்றாண்டின் முற்பகுதி என்று கூறுவோர், K.A. நீலகண்ட சாஸ்திரிகள் காம்போஜ நாட்டுக் கல்வெட்டைத் துணையாகக் கொண்டு கி.பி. 9-ஆம் நூற்றாண்டு என்று உறுதி செய்வர். ஆகவே மாயாவாதத்தைக் கூறும் மணிவாசகப் பெருமானும் அவர் காலத்திற்குப் பிந்தியவரெனல் பொருந்துவது ஒன்றாம்.

ஆயினும் ஏகான்மா வாதத்தின் வகையாகிய நான்கு மதங்களுக்கும் வியாசர் ஆசிரியர் என்று சிவஞானபோத மாபாடியம் கூறுகிறது.

அன்றியும் பாணினி முனிவருக்குச் சம காலத்தவராக இருந்த இலக்கண ஆசிரியராகிய வருஷரின் தம்பி உபவருஷர் என்பவர் அத்வைத சிந்தாந்தத்திற்கு ஆசிரியராக இருந்தார் என்று வரலாறு கூறுகிறது. ஆதலால் மாயாவாதம் சங்கரருக்கு முன்பேயே தமிழ்நாட்டில் ஓரளவாவது பரவியிருக்க வேண்டும். இதனைப் பிரச்சன்ன பௌத்தம் என்ற மரியாதைப் பெயரால் வழங்குவதைக் கொண்டு பௌத்தமும், மாயாவாதமும் அடிகளார் காலத்துப் பரவியிருந்தமை அறியப்படும். பௌத்தம் சம்பந்தர் காலத்துத் தேய்ந்துவிட்டது. சமணம் பெருகியிருந்தது என்பதைச் சம்பந்தர் வரலாறு கூறும். இத்தடைகள் குறுக்கிடும்போது சங்கரரைக் காலம் அளக்கும் கருவியாகக் கொண்டு ஒன்பதாம் நூற்றாண்டு என்று உறுதிசெய்வது அத்துணைப் பொருத்தமுடையதாக . இல்லை. 'மிண்டிய மாயாவாத' மென்னும் சொற்றொடர் சங்கரர் மதத்தையே குறித்தது என்பதற்குப் போதிய சான்றுகளும் இல்லை. ஆதலால் இக்காரணம் அவ்வளவு ஏற்புடையது ஆகாது. மேலும், தேவாரங்களில் மாயாவாதம் என்ற சொல்லாட்சி இல்லை. மாணிக்கவாசகர் காலத்துக்கு முன் அச்சொல் வேறு எந்த நூலிலும் குறிப்பிடவில்லை. அறுவகைச் சமயங்களைத் தொகுத்துக் கொடுக்கின்ற திவாகரம் பிங்கலந்தை இவற்றுள் மாயாவாதம் பேசப்பெற்றிலது. இவற்றின் பிற்காலத்தில் கி.பி.10-ஆம் நூற்றாண்டில் எழுந்த சூடாமணி நிகண்டில் 'புறச்சமயம் ஆறாவன உலகாயதம், பௌத்தம், ஆருகதம், மீமாம்சம், மாயாவாதம், பாஞ்சராத்ரம் என்பன' என்று சொல்லப் பெற்றுள்ளது. அதனால் மாணிக்கவாசகர் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டுக்கு முன்னும், பத்தாம் நூற்றாண்டிலுமே இப்பெயர் வழங்கியமை பெறப்படும். இதுவும் மாணிக்கவாசகர் ஒன்பதாம் நூற்றாண்டினர் என்பதற்குத் துணையாகலாம் என்பர் சிலர். இழிந்தவன் தன்னை இழிந்தவன் என்று தானே சொல்லிக் கொள்ள விரும்பாததைப் போல ஆருகதராகிய மண்டல புருஷர் தம் சமயத்தைப் புறச்சமயம் என்க கூறிக்கொள்வாரா, சைவம், பாசுபதம் முதலியவற்றை அகச்சமயம் என்று கூறுவாரா? அப்படியே உலகியல் நோக்கி உண்மையைக் கூற நேறினும் பிறர் மேலிட்டு உரைப்பாரே யன்றித் தம் கூற்றாகச் சொல்லாரன்றோ? இவற்றை எண்ணிப் பார்க்க அகச் சமயம், புறச்சமயம் பற்றிக்கூறும் அச்சூடாமணிப் பாடல்கள் இடைச் செருகல்களாக இருக்க வேண்டும் என்று எண்ணத் தோன்றுகிறதல்லவா? ஆதலால் நிகண்டுகளின் துணைக் கொண்டு மாயாவாத காலத்தைத் துணிவதும், அதைக்கொண்டு

மாணிக்கவாசகர் காலத்தை உறுதிசெய்வதும் அத்துணைச் சிறந்த முடிவு அன்று எனலாம்.

**ஆகமமும் மும்மலமும்:-** சைவ ஆகமங்கள் தமிழ் மக்களுடைய சடங்கு முறைகளையும், சமய உண்மைகளையும் திருக்கோயில் அமைப்பு முதலியவற்றையும் தெரிவிப்பன. அவை விளக்கம் பெற்ற காலம் மிகப் பிந்தியதே என்று எண்ணக் கிடக்கின்றது. மூவர் திருமுறைகளில் வேதம், வேதாந்தங்கள் பற்றிய குறிப்புக்கள் காணப்படுகின்றன வேயன்றி, ஆகமங்களைப் பற்றிய குறிப்புக்கள் இல்லை. மணிவாசக அடிகள் "மன்னு மாமலை மகேந்திரம் அதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித் தருளியும்" என்றும், "ஆகமமாகி நின்று அண்ணிப்பான் தாள் வாழ்க" என்றும் கூறுவதாலும், மாணிக்கவாசகர் பெற்ற ஞானோபதேசமும், பார்த்தலாகிய சட்சுதீட்சையும், அஸ்த மஸ்தக சம்யோகமாகிய ஸ்பரிஸ தீட்சையுமாக அமைவதால் இம்முறைகள் சிவாகமங்களில் தீட்சாவிதிப் படலங்களில் கூறப்படுவதாலும் அடிகளார் சிவாகமங்களை விளக்கம் பெற்ற தொடக்கக் காலத்தில் விளங்கியவராதல் வேண்டும். ஆதலால் இவர் தேவாரம் அருளிய மூவருக்கும் பிந்தியவர் என்பதில் ஐயமில்லை என்பர் சீனிவாச பிள்ளையவர்கள். மறைமலையடிகளின் தேவாரங்களில் ஆகம சீலர் என்ற சொற்றொடர் காணப்படுவதாலும் சில ஆகமங்கள் திருஞான சம்பந்தர் காலத்துக்கு முன்பும் சில ஆகமங்கள் மாணிக்கவாசகர் காலத்துக்குப் பின்பும் எழுந்தன. ஆதலாலும் ஆகம கூற்றுக்களை கொண்டு காலத்தை அறுதி செய்ய ஒண்ணாது என்பர். காலத்தால் ஐந்தாம் நூற்றாண்டினராகக் கருதப்படும் திருமூலர் இருபத்தெட்டு ஆகமங்களையும் அவற்றின் துணையாகமங் களையும் சொல்லுகிறார். ஆதலால் ஆகமச் சொல்லாட்சி மூவருக்கும் பிந்தியவர் இவர் என்பதற்குத் துணை செய்யாது.

தேவாரங்களில் மும்மலம் என்ற தொகைக் குறிப்புப் பெயர் எடுத்தாளப்படவில்லை. ஆனாலும் மாயை கன்மம் என்ற சொல்லாட்சி உள்ளன. அடிகளார் "மும்மை மலம் அறுவித்து" "மூலமாகிய மும்மலமறுக்கும் தூய மேனிச்சுடர்விடு சோதி" "மயக்க மாய தோர் மும்மலப் பழவல்வினைக்குள் அழுந்தவும்" என்ற பகுதிகளால் மும்மலம் என்ற தொகைச் சொல்லை உணர்த்துகின்றார். இதனால் இவர் தேவார ஆசிரியருக்குப் பிற்பட்டவர் என்பர் சீனிவாசப் பிள்ளையவர்கள். இது மிகப் பொருத்தமாகத் தான் தோன்றுகிறது. திருமந்திரத்துள் மும்மலம் ஐம்மலம் அவற்றின் வகைகள் காணப்படுவது இதற்குத்

தடையாய் இருப்பதால் அதற்குத் தக்கதோர் அமைதி காண முற்பட வேண்டும்.

**பாஇனங்களைக் கொண்டது:-** சங்க இலக்கியங்களில் வெண்பா முதலிய பாக்களே பயின்றுவரக் காண்கின்றோம். சிலப்பதிகாரத்திலும் சீவக சிந்தாமணியிலும் இசை தழுவிய பாடல்கள் இயங்குவ ஆயின. அவை தாழிசையும் துறையுமாகிய பா இனங்களாயின. நச்சினார்க்கினியர் ஆசிரியவிருத்தமும், கலிவிருத்தமும், கலிநிலைத்துறையுமாக இன்று மதிக்கப்படுகின்ற பாடல்களைக் கொச்சக ஒரு போகாகிய கலிப்பா எனவே வாதிடுவர். தேவாரங்களில் இசைதழுவிய - தாள வேற்றுமையோடு கூடிய பாவினங்கள் பரவியுள்ளன. அப்பர் சுவாமி பாடலில் வரும் குறுந்தொகை என்பன கலிவிருத்தங்கள். தாண்டகங்கள், விருத்த பேதங்களே. திருவிருத்தங்கள் என்பன கட்டளைக் கலித்துறைகள். மணிவாசகப் பெருமாள் வாக்கிலும் இவைகள் வருதலைக் கொண்டு மூவருக்கும் காலத்தாற் பிற்பட்டவர் இவர் எனல் எவ்வாறு பொருந்துவதாகும்? ஊன்றிப் பார்ப்போமாயின் அடிகளார் வாக்கில் வெண்பாக்கள் விளங்குகின்றன. தேவார ஆசிரியர் வாக்கில் பாவினங்களேயன்றிப் பாக்களைக் காணோமே. இவற்றால் பாவும் பாவினமுமாகிய துணைக் கொண்டு அடிகளார் காலத்தை அறுதியிடுவது பொருந்துமா? இன்னும் சிந்திப்போம்.

**சிற்றிலக்கிய வகைகள் அமைத்திருப்பது:-** அடிகளார் வாக்கில் சதகம், பதிகம், பத்து முதலிய சிற்றிலக்கிய வகைகள் நூலின் உள்ளுறுப்பாக அமைந்துள்ளன. இவைகள் மிகப் பிற்பட்டபாட்டியற் கருத்துக்களை ஏந்தி நிற்பன எனலாம். இலக்கியம் கண்டு அதற்கு இலக்கணம் இயம்பலே மரபாகலின் பாட்டியல் கருத்துக்களை இவை தாங்கியிருக்கின்றன என்பதை ஒழித்து இத்தகைய இலக்கிய அமைதிகளைக் கொண்டே பாட்டியல் இலக்கணம் எழுந்தது என்றால் வரும் இழுக்கு என்னவோ!

பூவல்லி, பொற்சுண்ணம், சாழல், கோத்தும்பி, தோணோக்கம் முதலிய மகளிர் செயல்களை அமைத்து அடிகளார் பாடியுள்ளார். ஆழ்வார்களும் இவ்வண்ணமே பாடுவதாலும்; பெரியாழ்வார், ஆண்டாள், நம்மாழ்வார் முதலியோர் கருத்தை ஒத்திருத்தலாலும் அவர்கள் காலமே இவர் காலமாகும். அல்லது பிந்தியது ஆகலாம். ஆழ்வார் காலம் கி.பி.850-925 முற்பட்டதாகும் என்பர் M. சீனிவாச ஐயங்கார் அவர்கள். இதனை மறுத்து உயர்திரு மறைமலையடிகளார்

அவர்கள் தமது 'மாணிக்க வாசகர் வரலாறும் - காலமும்' என்ற நூலில் எழுதியுள்ளார்கள். திருவிசைப்பா ஆசிரியர்கள் இவரைக் குறியாமை:-

ஒன்பதாம் திருமுறையில் கோயிற் பதிகத்தில் பூந்துருத்தி நம்பி காடவநம்பி என்பவர் அப்பர், சம்பந்தர், சேரமான் பெருமாள் நம்பியாரூரர் இவர்களைக் குறிப்பித்து, வாதவூரடிகளைக் குறிக்கவில்லை. இது மூவர் காலத்துக்கும் இவர் பிந்தியவரென்பதற்குப் பெருந்துணையாகும். இங்ஙனமே பத்தாம் நூற்றாண்டுக்கு முந்திய உரை நூல்களில் திருவாசகப் பாடல்களும், பாடற்பகுதிகளும் எடுத்தாளப் பெறாமையும் அதற்குப் பெருந்துணை செய்யும்.

போற்றித் திருவகவலில் "கலையார் அரிகேசரியாய் போற்றி" என்ற சொற்றொடர் வருகின்றது, இதனுள் 'அரிகேசரி' என்பது பாண்டியர் கொண்டுள்ள சிறப்புப் பெயரையே குறிக்கும் என்று இராகவையங்கார் அவர்கள் மொழிவார்கள். **T.P.** பழனியப்பபிள்ளை அவர்கள் சின்னமனூர் என வழங்கும் அரிகேசரி நல்லூரையும் அதிலுள்ள ராஜசிம்மேச்சரத்துச் சிவபெருமானையும் குறிக்கும் என்பர். ஔவை துரைசாமிப் பிள்ளை அவர்கள் கரியம்பாபுரமும், களக்குடியும் அந்நாளில் அரிகேசரீச்சரம் என வழங்கின என்றும், அரிகேசரியாய் என்ற சொற்றொடர் அரிகேசரீச்சரமுடையார் என்று பொருள்படுமே தவிர அரிகேசரி நல்லூரில் உள்ள ராஜசிம்மேச்சரமுடையாரைக் குறிக்கும் எனல் பொருத்தமன்று என்பர். கிரியம்பாபுரம், களக்குடிக் கோயில்கள் நெல்வேலி செருவென்ற நின்றசீர் நெடுமாறன் ஆகிய மாறவர்மன் அரிகேசரியாலோ அவன் மகனாலோ எடுக்கப்பட்டன ஆதல் வேண்டும் என்றும் கூறுவர். அவை எங்ஙனமாயினும் அடிகளார் இவ்வரசர்கள் காலத்துக்குப் பிந்தியவர் என்பதற்குச் சான்றாகத் தடையில்லை.

**தில்லையில் திருமால் கிடந்த கோலத்தில் எழுந்தருளி உள்ளமை:-**

திருக்கோவையாரில்,

**புரங்கடந்தான் அடிகாண்பான்புவி விண்டுபுக்கு அறியாது**
**இரங்கிடு எந்தாய்! என்று இரப்பத்தன் ஈரடிக்குஎன்**
**கரங்கள் தந்தான் ஒன்றுகாட்ட மற்று ஆங்கு**
**அதுவுங்காட்டிடு என்று**
**வரங்கிடந்தான் தில்லையம்பல முன்றில் அம்மாயவனே**

என்று தில்லையில் திருமால் கிடந்த கோலத்தைக் குறிப்பிடுகிறார் திருவாதவூரடிகள். திருமுறை ஆசிரியர்களும் சேரமான் பெருமாளும் திருமழிசை ஆழ்வாரும் திருமால் இருப்பைப்பற்றிக் குறிக்கவே இல்லை. ஆகவே தில்லைத் திருச்சித்திரக் கூடமாகிய திருமால் கோயிற்பகுதி அவர்கள் காலத்துக்குப் பின்னும் வாதவூரடிகள் காலத்துக்கு முன்னும் தோன்றியது ஆதல் வேண்டும். திருமங்கை ஆழ்வாரும் குலசேகர ஆழ்வாரும் பாடல்களிற் கூறும் முறையை நோக்க அவர்கள் காலத்தேதான் அது புதிதாக எடுக்கப்பட்டது எனத் தெரிகிறது. திருமங்கை ஆழ்வார் காலத்து மன்னன் நந்திவர்ம பல்லவன். அவன் காலத்தில் இக்கோயில் எழுந்தது. அவன் காலம் கி.பி. 710-775. ஆதலால் அடிகள் காலம் எட்டாம் நூற்றாண்டுக்குப் பின்பு என்பர் **T.P.** பழனியப்பப்பிள்ளை அவர்கள். அடிகளால் திருமால் இருப்புக் குறிக்கப்படவில்லை. சிவன் கோயில்களில் திருமால், பரிவாரமாக அமைக்கப்பெறுவது சிவாகம மரபு. ஆதலால் இதனைத் துணைக்கொண்டு அடிகள் கால எல்லையைக் கணிப்பது பொருந்துமா என்பதும் ஆராய்தற்குரியது.

**திருக்கோவையாரின் கிளவியமைப்பு:-** சங்க இலக்கியங் களில் தலைவன் தலைவி, பாங்கன் பாங்கி முதலானோர் கூற்றுக்கள் நீளச் சொற்றொடராக அமைந்துள்ளன. ஒன்றோ டொன்று தொடர்பு இல்லாத முறையில் தனித் தனியாகவும் இருக்கின்றன. இவற்றிற்கு இலக்கணமாகிய தொல்காப்பியமும் அவ்வாறே கூறுகிறது. அங்ஙனமிருக்க இறையனார் அகப்பொருள் உரை மரபை ஒட்டியும் திருக்கோவையார் பேராசிரியர் உரையின் முன்னர் எழுதப்பட்டுள்ள கிளவிக் கொத்து, கொளு இவற்றை ஒட்டியும் நாடக இயல்போல், பாகுபடுத்திக் காட்சி, ஐயம், துணிவு முதலியன வாகத் திருக்கோவையாரில் கிளவிகள் அமைந்துள்ளமை ஈண்டுச் சிந்தித்தற்குரியது. கிளவி அமைப்புக்கள் திருக்கோயைாருக்கு முன்பு யாரால் எங்குச் செப்பம் செய்யப்பட்டன என்பதை அறிந்து கொள்ளும் சான்றுகள் இப்போது இல்லை. ஆனாலும் திருவாதவூரடிகள் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டுக்கும் பத்தாம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்டது என்பதற்கு ஓரளவு துணை செய்யும். இதுகாறும் கூறியவற்றுள் வலிவுடைய காரணங்களைத் துணையாகக் கொண்டு வாதவூரடிகள் மூவர் முதலிகளுக்கும் பிற்பட்டவரே என்பதும், முதல் வரகுணனையே இவர் பாராட்டினார் என்பதும், கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் விளங்கியவர் என்பதும் தெளிவு. திருவாசகம் என்னும் இந்நூல் உயிர் வளர்க்கும் மருந்தாக - அன்பு நெறிக்கு

*அருந்துணையாக - இன்பப் பேரொளியாக விளங்குகிறது என்பதனைத் தமிழுலகம் நன்கு அறியுமாயினும் இதன் அமைப்புப் பற்றியும், ஆசிரியர் வரலாறு பற்றியும், அவர் வாழ்ந்த காலம் பற்றியும் பல்வேறு ஆசிரியர்கள் காட்டிய பொருள் நுணுக்கங்களையும் அடிப்படையாக வைத்து இப்பேரொளி விளக்கம் பெறுகின்றது. இதனை தெய்வத் தமிழுலகம் சிந்தையில் ஏற்று எண்ணி இன்புறுமாக!*

# அடிக்குறிப்புகள்

1. **Caivism is the real religion of the South of India, and of North Ceylon; and the Caiva Siddhanta philosophy has and deserves to have, far more influence than any other. The fifty-one poems which are here edited, translated, and annotated, are recited daily in all the great Caiva temples of South India, are on every one's lips.**

   **"Thiruvasagam depicts in beautiful hymns, the progress of the soul from the bondage of ignorance and passion into tye liberty of light and love, its first awakening, its joy and exaltation, way wardness and despondency, struggle and unrest, the peace and joy of union."**

2. இங்கு, தென்னவன் பிரமராயன் என்ற பட்டம் அளித்தான் என்ற செய்தி வெளிப்படையாகக் கூறாதிருப்பது அறிதற்குரியது.

3. **The Jackal miracle should be taken as one of the many floating myths current during the hymnal period of Tamila literature (A.D. 600 - 950), as he has not mentioned Manikka Vachakar in that connetion.**

4. திருச்சதகம் கதிர்மணி விளக்கம் முன்னுரை பக்கம். 1.

5. இனிப் பழையபுராணம் என வருவது இப் புராணத்தையே உணர்த்தும்.

6. பெரியவாச்சான்பிள்ளை திருப்பள்ளியெழுச்சிப் பிரவேசம்.

7. திருவாசகம் : சிவபுராணம் 24-வது வரி

8. " " 38- "

9. திருவாசகம் : சிவபுராணம் 62-வது வரி.

10. திருவாசக சிவபுரா 69, 70.

11. " " 80

12. கீர்த்தி : 10-45

13. திருவண்ட : 20 - 28

14. திருவண்டப் : வரி 160-168

15. போற்றித் : 11-60

16. சிவபுரா : 25-30

17. பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கன்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழி திருநாவலூர் வன்தொண்டர் பதம்போற்றி
ஊழிமலி வாதவூர்............. என்னும் நால்வர் துதிப்பாடல்
களும் இம்முறையை வற்புறுத்தும்.



## ஆசிரியரின் பிறநூல்கள்

1. திருக்குறள் அழகும் அமைப்பும்

2. நன்னூல் விருத்தியுரை



# திருவாசகப் பேரொளி

மகாவித்துவான்

ச. தண்டபாணி தேசிகர்



ISBN : 978-93-80218-50-2

GO 800




நூல் கிடைக்குமிடம் :



நூலங்காடி...
www.gowrabookfair.com
e-mail : gowra_09@yahoo.in

கௌரா ஏஜென்ஸீஸ்
10/14, தோப்பு வேங்கடாசலம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை - 5.